# அல்அர்பஊன அந்நவவிய்யா

## இமாம் அந் நவவி (ரஹ்) அவர்கள்

## பாகம் 1

[ Tamil – தமிழ் – تاميلي ]

M.S.M.இம்தியாஸ் யூசுப்

2014 - 1435

QuranKalvi.com

IslamHouse.com

# الأربعون النووية

« باللغة التاميلية »

الإمام
أبو زكريا النووي رحمه الله

ترجمة :محمد إمتياز يوسف

2014 - 1435
IslamHouse.com

# இமாம் அந்நவவி (ரஹ்) அவர்கள் தொகுத்த 40 ஹதீஸ்கள் - முதல் பாகம்

## தமிழில்: M.S.M . இம்தியாஸ் யூசுப் ஸலஃபி.

### الحديث الأول

عَنْ أَمِيرِ الْمُؤْمِنِينَ أَبِي حَفْصٍ عُمَرَ بْنِ الْخَطَّابِ ﷺ قَالَ: سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: " إنَّمَا الْأَعْمَالُ بِالنِّيَّاتِ، وَإِنَّمَا لِكُلِّ امْرِئٍ مَا نَوَى، فَمَنْ كَانَتْ هِجْرَتُهُ إلَى اللَّهِ وَرَسُولِهِ فَهِجْرَتُهُ إلَى اللَّهِ وَرَسُولِهِ، وَمَنْ كَانَتْ هِجْرَتُهُ لِدُنْيَا يُصِيبُهَا أَوْ امْرَأَةٍ يَنْكِحُهَا فَهِجْرَتُهُ إلَى مَا هَاجَرَ إلَيْهِ" .

رَوَاهُ إِمَامَا الْمُحَدِّثِينَ أَبُو عَبْدِ اللهِ مُحَمَّدُ بنُ إِسْمَاعِيل بن إِبْرَاهِيم بن الْمُغِيرَة بن بَرْدِزبَه الْبُخَارِيُّ الْجُعْفِيُّ ]وَأَبُو الْحُسَيْنِ مُسْلِمُ بنُ الْحَجَّاج بن مُسْلِم الْقُشَيْرِيُّ النَّيْسَابُورِيُّ [رَضِيَ اللهُ عَنْهُمَا فِي "صَحِيحَيْهِمَا" اللذِينِ هُمَا أَصَحُّ الْكُتُبِ الْمُصَنَّفَةِ.

'செயல்கள் அனைத்தும் எண்ணங்களைப் பொருத்தே அமைகின்றன. ஒவ்வொருவருக்கும்

அவர் எண்ணியதே கிடைக்கிறது. ஒருவரின் ஹிஜ்ரத் (பிறந்த நாட்டை துறந்து செல்லல்) உலகத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தால் அதையே அவர் அடைவார். ஒரு பெண்ணை நோக்கமாகக் கொண்டால் அவளை மணப்பார். எனவே, ஒருவரின் ஹிஜ்ரத் எதை நோக்கமாகக் கொண்டிருக்கிறதோ அது வாகவே அமையும்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அறிவிப்பவர் உமர் இப்னு கத்தாப்(ரலி) (நூல்: புகாரி)

## الحديث الثاني

حَدَّثَنِي أَبِي عُمَرُ بْنُ الْخَطَّابِ قَالَ

بَيْنَمَا نَحْنُ جُلُوسٌ عِنْدَ رَسُولِ اللَّهِ ﷺ ذَاتَ يَوْمٍ

إِذْ طَلَعَ عَلَيْنَا رَجُلٌ شَدِيدُ بَيَاضِ الثِّيَابِ، شَدِيدُ سَوَادِ الشَّعْرِ، لَا يُرَى عَلَيْهِ أَثَرُ السَّفَرِ، وَلَا يَعْرِفُهُ مِنَّا أَحَدٌ. حَتَّى جَلَسَ إِلَى النَّبِيِّ ﷺ. فَأَسْنَدَ رُكْبَتَيْهِ إِلَى رُكْبَتَيْهِ، وَوَضَعَ كَفَّيْهِ عَلَى فَخِذَيْهِ، وَقَالَ: يَا مُحَمَّدُ أَخْبِرْنِي عَنْ الْإِسْلَامِ. فَقَالَ رَسُولُ اللَّهِ ﷺ الْإِسْلَامُ أَنْ تَشْهَدَ أَنْ لَا إلَهَ إلَّا اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ، وَتُقِيمَ الصَّلَاةَ، وَتُؤْتِيَ الزَّكَاةَ، وَتَصُومَ رَمَضَانَ، وَتَحُجَّ الْبَيْتَ إنْ اسْتَطَعْت إلَيْهِ سَبِيلًا. قَالَ: صَدَقْت . فَعَجِبْنَا لَهُ يَسْأَلُهُ

وَيُصَدِّقُهُ! قَالَ: فَأَخْبِرْنِي عَنْ الْإِيمَانِ. قَالَ: أَنْ تُؤْمِنَ بِاَللَّهِ وَمَلَائِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ وَالْيَوْمِ الْآخِرِ، وَتُؤْمِنَ بِالْقَدَرِ خَيْرِهِ وَشَرِّهِ. قَالَ: صَدَقْت. قَالَ: فَأَخْبِرْنِي عَنْ الْإِحْسَانِ. قَالَ: أَنْ تَعْبُدَ اللَّهَ كَأَنَّك تَرَاهُ، فَإِنْ لَمْ تَكُنْ تَرَاهُ فَإِنَّهُ يَرَاك. قَالَ: فَأَخْبِرْنِي عَنْ السَّاعَةِ. قَالَ: مَا الْمَسْئُولُ عَنْهَا بِأَعْلَمَ مِنْ السَّائِلِ. قَالَ: فَأَخْبِرْنِي عَنْ أَمَارَاتِهَا؟ قَالَ: أَنْ تَلِدَ الْأَمَةُ رَبَّتَهَا، وَأَنْ تَرَى الْحُفَاةَ الْعُرَاةَ الْعَالَةَ رِعَاءَ الشَّاءِ يَتَطَاوَلُونَ فِي الْبُنْيَانِ. ثُمَّ انْطَلَقَ، فَلَبِثْنَا مَلِيًّا، ثُمَّ قَالَ: يَا عُمَرُ أَتَدْرِي مَنْ السَّائِلُ؟. قَلَتْ: اللَّهُ وَرَسُولُهُ أَعْلَمُ. قَالَ: فَإِنَّهُ جِبْرِيلُ أَتَاكُمْ يُعَلِّمُكُمْ دِينَكُمْ ". رَوَاهُ مُسْلِمٌ

என் தந்தை உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் என்னிடம் தெரிவித்தார்கள்: நாங்கள் ஒரு நாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் அருகில் இருந்தபோது தூய வெண்ணிற ஆடை அணிந்த, அடர்ந்த கறுப்பு நிறத்தில் தலைமுடி உடைய ஒரு மனிதர் வந்தார். பயணத்தில் வந்த எந்த அடையாளமும் அவரிடம் காணப்படவில்லை. எங்களில் எவருக்கும் அவரை (யார் என)த் தெரிய வில்லை. அவர் நபி (ஸல்) அவர்களின் அருகில் (வந்து), தம் முழங்கால்களை நபியவர்களின் முழங்கால்களோடு இணைத்துக்கொண்டு தம் கைகளைத் தம் தொடைகள்மீது வைத்(துக்

கொண்டு அமர்ந்)தார். பிறகு முஹம்மதே! இஸ்லாம் என்றால் என்னவென்று எனக்குத் தெரிவியுங்கள்" என்று கேட்டார். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இஸ்லாம் என்பது அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை என்றும் முஹம்மத் (ஆகிய நான்) அல்லாஹ்வின் தூதர் என்றும் நீங்கள் உறுதி கூறுவதாகும். மேலும்,தொழுகையைக் கடைப்பிடிப்பதும், ஸகாத்தை வழங்கி வருவதும், ரமளான் மாதத்தில் நோன்பு நோற்பதும், சென்றுவர இயலுமானால் இறையில்லம் கஅபாவில் ஹஜ் செய்வதும் ஆகும் என்று பதிலளித்தார்கள். அதற்கு அந்த மனிதர் "நீங்கள் உண்மை சொன்னீர்கள்" என்றார். அவர் இவ்வாறு கூறியதைக் கேட்டு, அவரே கேள்வியும் கேட்டுவிட்டு அவரே பதிலையும் உறுதிப்படுத்துகிறாரே என்று நாங்கள் வியப்படைந்தோம்.

அடுத்து அவர், "ஈமான் பற்றி எனக்குத் தெரிவியுங்கள்" என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ் வையும் அவனுடைய வானவர்களையும் அவனுடைய வேதங்களையும் அவனுடைய தூதர்களையும்

இறுதி நாளையும் நீங்கள் நம்புவதாகும். நன்மை, தீமை அனைத்தும் விதியின்படியே நடக்கின்றன என்றும் நீங்கள் நம்புவதுமாகும்" என்று கூறினார்கள். அதற்கும் அம்மனிதர் நீங்கள் உண்மை சொன்னீர்கள் என்றார். அடுத்து அம்மனிதர், இஹ்சான் பற்றி எனக்குத் தெரிவியுங் கள் என்றார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், (இஹ்சான் என்பது) அல்லாஹ்வை நீங்கள் பார்த்துக் கொண்டிருப் பதைப் போன்ற உணர்வுடன் வணங்கு வதாகும். நீங்கள் அவனை பார்க்கவில்லை என்றாலும், அவன் உங்களைப் பார்க்கின்றான் என்று பதிலளித்தார்கள்.

அம்மனிதர், மறுமை (உலக அழிவு) நாளைப் பற்றி (அது எப்போது வரும் என) எனக்குத் தெரிவியுங்கள்" என்று கேட்க. நபி (ஸல்) அவர்கள், கேள்வி கேட்கப்படுபவர் கேட்ப வரைவிட (அதாவது உங்களைவிட நான்) அதிகம் அறிந்தவர் அல்லர். (இது பற்றி எனக்கும் தெரியாது, உங்களுக்கும் தெரியாது.) என்று கூறினார்கள். அம் மனிதர், மறுமை நாளின் அடையாளங்களைப் பற்றி எனக்குத்

தெரிவியுங்கள்! என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், ஓர் அடிமைப் பெண் தன் எசமானியைப் பெற்றெடுப்பதும், காலில் செருப்பில்லாத, அரைகுறை ஆடைகளை அணிந்துள்ள ஏழைகளான ஆடு மேய்க்கும் இடையர்கள் போட்டி போட்டுக்கொண்டு உயரமான கட்டடங்கள் கட்டுவதை நீங்கள் காண்பதும் ஆகும்" என்று கூறினார்கள். பிறகு அம்மனிதர் சென்றுவிட்டார். நீண்ட நேரம் நான் (அங்கேயே) இருந்தேன். பின்னர் என்னிடம் நபி (ஸல்) அவர்கள், உமரே! கேள்வி கேட்ட அந்த நபர் யார் என்று உங்களுக்குத் தெரியுமா? என்று கேட்டார்கள். நான், அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள் என்று சொன்னேன். நபி (ஸல்) அவர்கள், அவர்தாம் (வானவர்) ஜிப்ரீல். உங்களுக்கு உங்களது மார்க்கத்தைக் கற்றுத் தருவதற்காக உங்களிடம் அவர் வந்தார் என்று சொன்னார்கள். அறிவிப்பவர்: இப்னு உமர்(ரலி) நூல்:முஸ்லிம்

## الحديث الثالث

عَنْ أَبِي عَبْدِ الرَّحْمَنِ عَبْدِ اللَّهِ بْنِ عُمَرَ بْنِ الْخَطَّابِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: " بُنِيَ الْإِسْلَامُ عَلَى خَمْسٍ: شَهَادَةِ أَنْ لَا إلَهَ إلَّا اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ، وَإِقَامِ الصَّلَاةِ، وَإِيتَاءِ الزَّكَاةِ، وَحَجِّ الْبَيْتِ، وَصَوْمِ رَمَضَانَ".

رَوَاهُ الْبُخَارِيُّ، وَمُسْلِمٌ ].

'வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வையன்றி வேறு யாருமில்லை என்றும் முஹம்மத் அவர்கள் இறைத்தூதர் என்றும் உறுதியாக நம்புதல், தொழுகையை நிலை நிறுத்துதல், ஸகாத்து வழங்குதல், ஹஜ் செய்தல், ரமலானில் நோன்பு நோற்றல், ஆகிய ஐந்து காரியங்களின் மீது இஸ்லாம் நிறுவப்பட்டுள்ளது' என்று இறைத் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அறிவிப்பவர்: இப்னு உமர்(ரலி) நூல்: புகாரி முஸ்லிம்

## الحديث الرابع

عَنْ أَبِي عَبْدِ الرَّحْمَنِ عَبْدِ اللَّهِ بْنِ مَسْعُودٍ ﷺ قَالَ: حَدَّثَنَا رَسُولُ اللَّهِ ﷺ -وَهُوَ الصَّادِقُ الْمَصْدُوقُ-: "إنَّ أَحَدَكُمْ يُجْمَعُ خَلْقُهُ فِي بَطْنِ

أُمِّهِ أَرْبَعِينَ يَوْمًا نُطْفَةً، ثُمَّ يَكُونُ عَلَقَةً مِثْلَ ذَلِكَ، ثُمَّ يَكُونُ مُضْغَةً مِثْلَ ذَلِكَ، ثُمَّ يُرْسَلُ إلَيْهِ الْمَلَكُ فَيَنْفُخُ فِيهِ الرُّوحَ، وَيُؤْمَرُ بِأَرْبَعِ كَلِمَاتٍ: بِكَتْبِ رِزْقِهِ، وَأَجَلِهِ، وَعَمَلِهِ، وَشَقِيٍّ أَمْ سَعِيدٍ؛ فَوَاَللَّهِ الَّذِي لَا إلَهَ غَيْرُهُ إنَّ أَحَدَكُمْ لَيَعْمَلُ بِعَمَلِ أَهْلِ الْجَنَّةِ حَتَّى مَا يَكُونُ بَيْنَهُ وَبَيْنَهَا إلَّا ذِرَاعٌ فَيَسْبِقُ عَلَيْهِ الْكِتَابُ فَيَعْمَلُ بِعَمَلِ أَهْلِ النَّارِ فَيَدْخُلُهَا. وَإِنَّ أَحَدَكُمْ لَيَعْمَلُ بِعَمَلِ أَهْلِ النَّارِ حَتَّى مَا يَكُونُ بَيْنَهُ وَبَيْنَهَا إلَّا ذِرَاعٌ فَيَسْبِقُ عَلَيْهِ الْكِتَابُ فَيَعْمَلُ بِعَمَلِ أَهْلِ الْجَنَّةِ فَيَدْخُلُهَا".

رَوَاهُ الْبُخَارِيُّ وَمُسْلِمٌ

[

அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அறிவித்தார். உண்மையே பேசியவரும் உண்மையே அறிவிக்கப் பட்டவருமான இறைத்தூதர்(ஸல்) அவர்கள் எங்களிடம் கூறினார்கள். உங்கள் படைப்பு உங்கள் தாயின் வயிற்றில் நாற்பது நாள்களில் ஒருங்கிணைக்கப்படுகிறது. பிறகு அதே போன்ற காலத்தில் (40 நாள்களில் அட்டை - போன்று) ஒரு கருக்கட்டியாக மாறுகிறது. பிறகு, அதே போன்ற காலத்தில் (மெல்லப்பட்ட சக்கை போன்ற) சதைப் பிண்டமாக மாறுகிறது. பிறகு அல்லாஹ் ஒரு

வானவரை (அதனிடம்) அனுப்புகிறான். அந்த வானவருக்கு நான்கு கட்டளைகள் பிறப்பிக்கப்படுகின்றன.

1. அதன் (கருவாக இருக்கும் அந்த மனிதனின்) செயலையும்
2. (அவனுடைய செயல்கள் எப்படியிருக்கும் என்பதையும்)
3. அதன் வாழ்வாதாரத்தையும் (அவனுக்க என்னென்ன எந்த அளவு கிடைக்கும் என்பதையும்)
4. அதன் வாழ்நாளையும் (அவன் எவ்வளவு நாள் வாழ்வான் எப்போது இறப்பான் என்பதையும்) அது (இறுதிக் கட்டத்தில்) துர்பாக்கியசாலியா, நற்பேறுடையதா என்ப தையும் (நான் விதித்தபடி) எழுது" என்று அந்த வான வருக்குக் கட்டளையிடப்படும். பிறகு அதனுள் உயிர் ஊதப்படும்.

இதனால் தான், உங்களில் ஒருவர் (நற்) செயல் புரிந்து கொண்டே செல்வார். எந்த அளவிற்கென்றால் அவருக்கும் சொர்க்கத்திற்கு மிடையே ஒரு முழம் (தூரம்) தான் இருக்கும்.

அதற்குள் அவரின் விதி அவரை முந்திக் கொள்ளும். அவர் நரகவாசிகளின் செயலைச் செய்து விடுவார். (அதன் விளைவாக, நரகம் புகுந்து விடுவார்) ஒருவர் (தீய) செயல் புரிந்து கொண்டே செல்வார். எந்த அளவிற்கென்றால் அவருக்கும் நரகத்திற்குமிடையே ஒரேயொரு முழம் (தூரம்) தான் இருக்கும். அதற்குள் விதி அவரை முந்திக் கொள்ளும். அதனால் அவர் செர்க்கவாசிகளின் செயலைச் செய்வார்.

(அதன் காரணத்தால் சொர்க்கம் புகுவார்)
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி)
நூல்: புகாரி முஸ்லிம்

## الحديث الخامس

عَنْ أُمِّ الْمُؤْمِنِينَ أُمِّ عَبْدِ اللَّهِ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا، قَالَتْ: قَالَ: رَسُولُ اللَّهِ ﷺ "مَنْ أَحْدَثَ فِي أَمْرِنَا هَذَا مَا لَيْسَ مِنْهُ فَهُوَ رَدٌّ". رَوَاهُ الْبُخَارِيُّ وَمُسْلِمٌ

وَفِي رِوَايَةٍ لِمُسْلِمٍ:"مَنْ عَمِلَ عَمَلًا لَيْسَ عَلَيْهِ أَمْرُنَا فَهُوَ رَدٌّ" .

நம்முடைய இந்த (மார்க்க) விவகாரத்தில் அதில் இல்லாததைப் புதிதாக எவன் உண்டாக்குகிறானோ அவனுடைய அந்தப் புதுமை நிராகரிக்கப்பட்டதாகும் என இறைத் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்; ஆயிஷா(ரலி) (நூல்,முஸ்லிம்)

முஸ்லிமில் வரக்கூடிய இன்னுமொரு அறிவிப்பில்

நம்முடைய கட்டளை இல்லாத ஒரு செயலை (அமலை) எவர் செய்கிறாரோ அது நிராகரிக்கப்பட்டதாகும்என இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஆயிஷா(ரலி)

## الحديث السادس

عَنْ أَبِي عَبْدِ اللَّهِ النُّعْمَانِ بْنِ بَشِيرٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: "إنَّ الْحَلَالَ بَيِّنٌ، وَإِنَّ الْحَرَامَ بَيِّنٌ، وَبَيْنَهُمَا أُمُورٌ مُشْتَبِهَاتٌ لَا يَعْلَمُهُنَّ كَثِيرٌ مِنْ النَّاسِ، فَمَنْ اتَّقَى الشُّبُهَاتِ فَقْد اسْتَبْرَأَ لِدِينِهِ وَعِرْضِهِ، وَمَنْ وَقَعَ فِي الشُّبُهَاتِ وَقَعَ فِي الْحَرَامِ، كَالرَّاعِي يَرْعَى حَوْلَ الْحِمَى يُوشِكُ أَنْ يَرْتَعَ فِيهِ، أَلَا وَإِنَّ لِكُلِّ مَلِكٍ حِمًى، أَلَّا وَإِنَّ حِمَى

اللَّهِ مَحَارِمُهُ، أَلَّا وَإِنَّ فِي الْجَسَدِ مُضْغَةً إِذَا صَلَحَتْ صَلَحَ الْجَسَدُ كُلُّهُ، وَإِذَا فَسَدَتْ فَسَدَ الْجَسَدُ كُلُّهُ، أَلَا وَهِيَ الْقَلْبُ". رَوَاهُ الْبُخَارِيُّ ، وَمُسْلِمٌ.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: (ஆகுமாக்கப்பட்டவை) ஹலால் தெளிவானது, (தடை செய்யப்பட்டவை) ஹராம்தெளிவானது. இவ்விரண்டுக்கும் இடையில் சந்தேகத்திற்கிட மானவையும் (முஷ்தபிஹாத்) இருக்கின்றன. மக்களில் பெரும்பாலோர் அவற்றை அறியமாட்டார்கள்.

எனவே, யார் சந்தேகத்திற்கிடமானவற்றைத் தவிர்த்துக் கொள்கிறாரோ அவர் தமது மார்க்கத்தையும் தமது மானத்தையும் காப்பாற்றிக்கொள்கிறார். யார் சந்தேகத்திற் கிடமானவற்றில் வீழ்ந்து விடுகிறாரோ அவர் ஹராமில் (தடைசெய்யப்பட்டவற்றில்) வீழ்ந்து விடுகிறார். அனுமதிக்கப்படாத மேய்ச்சல் நிலத்தின் அருகில் தனது கால் நடைகளை மேய்த்துக் கொண்டிருக்கயில் அவை தடுக்கப் பட்ட அம்மேய்ச்சல் நிலத்தில் சென்று மேய்ந்து விடுமோ எனும் அச்சத்திற்கு ஆளாகும் ஒரு இடையனின் நிலையைப் போன்றே இவரது

நிலை இருக்கின்றது. அறிந்து கொள்ளுங்கள். சொந்தமான மேய்ச்சல் நிலம் (எல்லை) உண்டு. அல்லாஹ்வுக்கு சொந்தமான மேய்ச்சல் நிலம் (எல்லை) அவன் அனுமதிக்காத (ஹராமான) காரியங்களாகும். அறிந்து கொள்ளுங்கள்! உடலில் ஒரு சதைத் துண்டு இருக்கிறது. அது சீரடைந்துவிட்டால் உடல் முழுவதும் சீரடைந்துவிடும். அது கெட்டு விட்டால் முழு உடலும் கெட்டு விடும். அறிந்து கொள்ளுங்கள்! அதுவே இதயம். இதை நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். இதை அவர்கள் அறிவிக்கும்போது தம்மிரு காதுகளை நோக்கி இரு விரல்களால் சைகை செய்து (இந்தக் காதுகளால்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (மேற்கண்டவாறு) கூறியதைக் கேட்டேன் என்றார்கள். நூல்: புகாரி முஸ்லிம்.

## الحديث السابع

عَنْ أَبِي رُقَيَّةَ تَمِيمِ بْنِ أَوْسٍ الدَّارِيِّ ﷺ أَنَّ النَّبِيَّ ﷺ قَالَ: "الدِّينُ النَّصِيحَةُ. قُلْنَا: لِمَنْ؟ قَالَ لِلَّهِ، وَلِكِتَابِهِ، وَلِرَسُولِهِ، وَلِأَئِمَّةِ الْمُسْلِمِينَ وَعَامَّتِهِمْ" . رَوَاهُ مُسْلِمٌ.

“மார்க்கம் (தீன்) என்பதே ‘நலம் நாடுவது’ தான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார் கள்.நாங்கள், யாருக்கு? (நலம் நாடுவது)” என்று கேட்டோம். “அல்லாஹ்வுக் கும், அவனது வேதத்துக்கும், அவனது தூதருக்கும், முஸ்லிம் தலைவர்களுக்கும், அவர்களில் பொது மக்களுக்கும்“ என்று நபி (ஸல்) அவர்கள் பதிலளித்தார்கள்.

அறிவிப்பவர்:தமீமுத் தாரீ (ரலி)

நூல்: முஸ்லிம்.

## الحديث الثامن

عَنْ ابْنِ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: "أُمِرْت أَنْ أُقَاتِلَ النَّاسَ حَتَّى يَشْهَدُوا أَنْ لَا إلَهَ إلَّا اللَّهُ وَأَنَّ مُحَمَّدًا رَسُولُ اللَّهِ، وَيُقِيمُوا الصَّلَاةَ، وَيُؤْتُوا الزَّكَاةَ؛ فَإِذَا فَعَلُوا ذَلِكَ عَصَمُوا مِنِّي دِمَاءَهُمْ

وَأَمْوَالَهُمْ إِلَّا بِحَقِّ الْإِسْلَامِ، وَحِسَابُهُمْ عَلَى اللَّهِ تَعَالَى" . رَوَاهُ الْبُخَارِيُّ ، وَمُسْلِمٌ

'மனிதர்கள், வணக்கத்திற்குத் தகுதியானவன் அல்லாஹ் வை யன்றி வேறு யாருமில்லை, முஹம்மத் இறைத்தூதர் என்று உறுதியாக நம்பி, தொழுகையை நிலை நிறுத்தி, ஸகாத்தும் கொடுக்கும் வரை அவர்களுடன் போரிட வேண்டும் என்று நான் கட்டளையிடப் பட்டுள் ளேன். இவற்றை அவர்கள் செய்து விடுவார் களானால் தம் உயிர், உடைமைகளை என்னிட மிருந்து பாதுகாத்துக் கொள்வார்கள். இஸ்லாத் தின் வேறு உரிமைகளில் (அவர் கள் வரம்பு மீறனாலே) தவிர! மேலும் அவர்களின் விசா ரணை இறைவனிடமே உள்ளது' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அறிவிப்பவர்:அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) : நூல்: முஸ்லிம்.

## الحديث التاسع

عَنْ أَبِي هُرَيْرَةَ عَبْدِ الرَّحْمَنِ بْنِ صَخْرٍ ﷺ قَالَ: سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: "مَا نَهَيْتُكُمْ عَنْهُ فَاجْتَنِبُوهُ، وَمَا أَمَرْتُكُمْ بِهِ فَأْتُوا مِنْهُ مَا اسْتَطَعْتُمْ، فَإِنَّمَا أَهْلَكَ الَّذِينَ مِنْ قَبْلِكُمْ كَثْرَةُ مَسَائِلِهِمْ وَاخْتِلَافُهُمْ عَلَى أَنْبِيَائِهِمْ ".

رَوَاهُ الْبُخَارِيُّ ، وَمُسْلِمٌ

நான் எதை (ச் செய்ய வேண்டாமென) உங்களுக்குத் தடை செய்துள்ளேனோ அதிலிருந்து நீங்கள் விலகிக் கொள்ளுங்கள். நான் எதை (ச்செய்யுமாறு) உங்களுக்குக் கட்டளையிட்டுள்ளேனோ அதை உங்களால் இயன்ற வரை செய்யுங்கள். ஏனெனில், உங்களுக்குமுன் வாழ்ந்த வர்களை அழித்த தெல்லாம் அவர்கள் தம் இறைத் தூதர் களிடம் அதிகமாகக் கேள்வி கேட்டதும் அவர்களுடன் கருத்து வேறுபாடு கொண்டதும்தான் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) அவர்கள் நூல்: புகாரி முஸ்லிம்.

## الحديث العاشر

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ "إنَّ اللَّهَ طَيِّبٌ لَا يَقْبَلُ إلَّا طَيِّبًا، وَإِنَّ اللَّهَ أَمَرَ الْمُؤْمِنِينَ بِمَا أَمَرَ بِهِ الْمُرْسَلِينَ فَقَالَ تَعَالَى: "يَا أَيُّهَا الرُّسُلُ كُلُوا مِنْ الطَّيِّبَاتِ وَاعْمَلُوا صَالِحًا"، وَقَالَ تَعَالَى: "يَا أَيُّهَا الَّذِينَ آمَنُوا كُلُوا مِنْ طَيِّبَاتِ مَا رَزَقْنَاكُمْ" ثُمَّ ذَكَرَ الرَّجُلَ يُطِيلُ السَّفَرَ أَشْعَثَ أَغْبَرَ يَمُدُّ يَدَيْهِ إلَى السَّمَاءِ: يَا رَبِّ! يَا رَبِّ! وَمَطْعَمُهُ حَرَامٌ، وَمَشْرَبُهُ حَرَامٌ، وَمَلْبَسُهُ حَرَامٌ، وَغُذِّيَ بِالْحَرَامِ، فَأَنَّى يُسْتَجَابُ لَهُ؟".

رَوَاهُ مُسْلِمٌ

"மக்களே! அல்லாஹ் தூயவன். தூய்மையானதையே அவன் ஏற்கின்றான். அல்லாஹ் தன்னுடைய தூதர்களுக் குக் கட்டளையிட்டவற்றையே இறை நம்பிக்கை யாளர்களுக்கும் கட்டளையிட்டுள்ளான்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறிவிட்டு(ப் பின்வரும் இரு வசனங்களை) ஓதிக்காட்டினார்கள்:

தூதர்களே! தூய்மையான பொருள்களிலிருந்து உண்ணுங்கள். நற்செயலைச் செய்யுங்கள். திண்ணமாக நான், நீங்கள் செய்வதை நன்கு அறிபவன் ஆவேன் (23:51).

"நம்பிக்கையாளர்களே! நாம் உங்களுக்கு வழங்கிய தூய்மையான பொருள்களிலிருந்து உண்ணுங்கள். நீங்கள் (உண்மையில்) அல்லாஹ்வைத் தான் வணங்குகிறீர்களென்றால், அவனுக்கு நன்றி பாராட்டுங்கள் (2:172).

பிறகு ஒரு மனிதரைப் பற்றிச் சொன்னார்கள். "அவர் தலைவிரி கோலத்துடனும் புழுதி படிந்த நிலையிலும் நீண்ட பயணம் மேற்கொள்கிறார். அவர் தம் கரங்களை வானை நோக்கி உயர்த்தி "என் இறைவா, என் இறைவா" என்று பிரார்த்திக் கிறார். ஆனால், அவர் உண்ணும் உணவு தடைசெய்யப்பட்டதாக இருக்கிறது. அவர் அருந்தும் பானம் தடைசெய்யப்பட்டதாக இருக்கிறது. அவர் அணியும் உடை தடை செய்யப்பட்டதாக இருக்கிறது. தடை செய்யப் பட்ட உணவையே அவர் உட்கொண்டிருக்கி றார். இத்தகையவருக்கு எவ்வாறு (அவரது பிரார்த்தனை) ஏற்கப்படும்?" என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்:அபூஹுரைரா (ரலி) அவர்கள் நூல்: புகாரி முஸ்லிம்.

## الحديث الحادي عشر

عَنْ أَبِي مُحَمَّدٍ الْحَسَنِ بْنِ عَلِيِّ بْنِ أَبِي طَالِبٍ سِبْطِ رَسُولِ اللَّهِ ﷺ وَرَيْحَانَتِهِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: حَفِظْت مِنْ رَسُولِ اللَّهِ ﷺ "دَعْ مَا يُرِيبُك إلَى مَا لَا يُرِيبُك".

رَوَاهُ التِّرْمِذِيُّ وَالنَّسَائِيّ ، وَقَالَ التِّرْمِذِيُّ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

உனக்கு சந்தேகம் தருபவற்றை விட்டு விட்டு சந்தேகம் தராதவற்றின் பால் சென்று விடு என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்

அறிவிப்பவர்: ஹஸன் (ரலி) நூல்: திர்மிதி நஸாயீ

## الحديث الثاني عشر

عَنْ أَبِي هُرَيْرَةَ ؓ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ "مِنْ حُسْنِ إسْلَامِ الْمَرْءِ تَرْكُهُ مَا لَا يَعْنِيهِ". حَدِيثٌ حَسَنٌ، رَوَاهُ التِّرْمِذِيُّ، ابن ماجه

ஒரு முஸ்லிம் தனக்கு சம்பந்தமில்லாதவை களை விட்டு விடுவதே இஸ்லாத்தின் சிறந்த காரியமாகும் என நபி (ஸல்) அவர்கள்

கூறினார்கள். அறிவிப்பவர்:அபூஹுரைரா(ரலி) நூல்: திர்மிதி

## الحديث الثالث عشر

عَنْ أَبِي حَمْزَةَ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ خَادِمِ رَسُولِ اللَّهِ ﷺ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ: "لَا يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى يُحِبَّ لِأَخِيهِ مَا يُحِبُّ لِنَفْسِهِ".

رَوَاهُ الْبُخَارِيُّ وَمُسْلِمٌ

தனக்கு விரும்புவதை தன் சகோதரனுக்கு விரும்பாதவரை உங்களில் எவரும் விசுவாசி யாக மாட்டார் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: அனஸ்(ரலி) அவர்கள் நூல்:புகாரி முஸ்லிம்

## الحديث الرابع عشر

عَنْ ابْنِ مَسْعُودٍ ﷺ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ "لَا يَحِلُّ دَمُ امْرِئٍ مُسْلِمٍ ] يشهد أن لا إله إلا الله، وأني رسول الله] إلَّا بِإِحْدَى ثَلَاثٍ: الثَّيِّبُ الزَّانِي، وَالنَّفْسُ بِالنَّفْسِ، وَالتَّارِكُ لِدِينِهِ الْمُفَارِقُ لِلْجَمَاعَةِ".

رَوَاهُ الْبُخَارِيُّ، وَمُسْلِمٌ

'அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறெவரு மில்லை. நான் அல்லாஹ்வின்

தூதராவேன்' என உறுதி மொழி கூறிய முஸ்லி மான எந்த மனிதரையும் மூன்று காரணங்களில் ஒன்றை முன்னிட்டே தவிர வேறெதற்காகவும் கொலை செய்ய அனுமதி இல்லை. (அவை:) 1. ஒரு மனிதரைக் கொலை செய்ததற்கு பதிலாகக் கொலை செய்வது.

2. திருமணமானவன் விபசாரம் செய்வது.

3. 'ஜமாஅத்' எனும் முஸ்லிம் சமூகக் கூட்ட மைப்பைக் கைவிட்டு, மார்க்கத்திலிருந்தே வெளியேறி விடுவது.

என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்
அறிவிப்பவர்: இப்னு மஸ்ஊத் (ரலி) அவர்கள்
நூல்:புகாரி முஸ்லிம்

## الحديث الخامس عشر

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: "مَنْ كَانَ يُؤْمِنُ بِاَللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ فَلْيَقُلْ خَيْرًا أَوْ لِيَصْمُتْ، وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاَللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ فَلْيُكْرِمْ جَارَهُ، وَمَنْ كَانَ يُؤْمِنُ بِاَللَّهِ وَالْيَوْمِ الْآخِرِ فَلْيُكْرِمْ ضَيْفَهُ".

رَوَاهُ الْبُخَارِيُّ، وَمُسْلِمٌ

எவர் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் விசுவாசம் கொண்டிருக்கிறாரோ அவர் பேசினால் நல்லதை பேசட்டும், அல்லது வாய் மூடி மௌனமாக இருக்கட்டும். எவர் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் விசுவாசம் கொண்டிருக்கிறாரோ அவர் தனது அண்டைவீட்டாரை கௌரவப்படுத்தட்டும். எவர் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் விசுவாசம் கொண்டிருக்கிறாரோ அவர் தனது விருந்தாளியை கண்ணியப்படுத்தட்டும். என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்:அபூஹுரைரா(ரலி) அவர்கள் நூல்: புகாரி முஸ்லிம்.

## الحديث السادس عشر

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ أَنْ رَجُلًا قَالَ لِلنَّبِيِّ ﷺ أَوْصِنِي. قَالَ: لَا تَغْضَبْ، فَرَدَّدَ مِرَارًا، قَالَ: لَا تَغْضَبْ" . رَوَاهُ الْبُخَارِيُّ

ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து எனக்கு நல்லுபதேசம் செய்யுங்கள் என்றார். அப்போது நபியவர்கள் நீ கோபப்படாதே என்றார்கள். அம்மனிதர் மீண்டும் மீண்டும் கேட்டார். அப்போதும் நீ கோபப்படாதே

என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்:அபூஹுரைரா(ரலி) நூல்: புகாரி

:

## الحديث السابع عشر

عَنْ أَبِي يَعْلَى شَدَّادِ بْنِ أَوْسٍ ﷺ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ: "إنَّ اللَّهَ كَتَبَ الْإِحْسَانَ عَلَى كُلِّ شَيْءٍ، فَإِذَا قَتَلْتُمْ فَأَحْسِنُوا الْقِتْلَةَ، وَإِذَا ذَبَحْتُمْ فَأَحْسِنُوا الذِّبْحَةَ، وَلْيُحِدَّ أَحَدُكُمْ شَفْرَتَهُ، وَلْيُرِحْ ذَبِيحَتَهُ". رَوَاهُ مُسْلِمٌ

அல்லாஹ் எல்லாவற்றிலும் எளிய முறையை விதியாக்கியுள்ளான். எனவே, கொல்லும் போதும் எளிய முறையில் கொல்லுங்கள். அறுக்கும்போதும் எளிய முறையில் அறுங்கள். உங்களில் ஒருவர் அறுப்பதற்கு முன் கத்தியைத் தீட்டிக் கொள்ளட்டும். அறுக்கப்படும் பிராணியின் கஷ்டங்களை எளிதாக்கட்டும் (ஆசுவாசப் படுத்தட்டும்) என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர். அபூயஃலா ஷத்தாத் இப்னு அவ்ஸ்(ரலி) (ரலி) அவர்கள் நூல்: முஸ்லிம்

## الحديث الثامن عشر

عَنْ أَبِي ذَرٍّ جُنْدَبِ بْنِ جُنَادَةَ، وَأَبِي عَبْدِ الرَّحْمَنِ مُعَاذِ بْنِ جَبَلٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، عَنْ رَسُولِ اللَّهِ ﷺ قَالَ: "اتَّقِ اللَّهَ حَيْثُمَا كُنْت، وَأَتْبِعْ السَّيِّئَةَ الْحَسَنَةَ تَمْحُهَا، وَخَالِقْ النَّاسَ بِخُلُقٍ حَسَنٍ" .

رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ، وَفِي بَعْضِ النُّسَخِ: حَسَنٌ صَحِيحٌ.

எங்கிருந்தாலும் அல்லாஹ்வை அஞ்சிக் கொள். தீய செயலை செய்து விட்டால் அதனைத் தொடர்து நன்மையொன்றை செய்து கொள். இந்த நல்ல செயல் தீய செயலை அழித்து விடும். மக்களிடம் அழகிய முறையில் நடந்து கொள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: அபூதர் ஜுன்துப் இப்னு ஜுனாதா(ரலி) .நூல்: திர்மிதி

## الحديث التاسع عشر

عَنْ عَبْدِ اللَّهِ بْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: "كُنْت خَلْفَ رَسُولِ اللَّهِ ﷺ يَوْمًا، فَقَالَ: يَا غُلَامِ! إنِّي أُعَلِّمُك كَلِمَاتٍ: احْفَظْ اللَّهَ يَحْفَظْك، احْفَظْ اللَّهَ تَجِدْهُ تُجَاهَك، إذَا سَأَلْت فَاسْأَلْ اللَّهَ، وَإِذَا اسْتَعَنْت فَاسْتَعِنْ بِاَللَّهِ، وَاعْلَمْ أَنَّ الْأُمَّةَ لَوْ اجْتَمَعَتْ عَلَى أَنْ يَنْفَعُوك بِشَيْءٍ لَمْ يَنْفَعُوك إلَّا بِشَيْءٍ قَدْ كَتَبَهُ اللَّهُ لَك، وَإِنْ اجْتَمَعُوا عَلَى أَنْ يَضُرُّوك بِشَيْءٍ لَمْ يَضُرُّوك إلَّا بِشَيْءٍ قَدْ كَتَبَهُ اللَّهُ عَلَيْك؛ رُفِعَتْ الْأَقْلَامُ، وَجَفَّتْ الصُّحُفُ" . رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

وَفِي رِوَايَةِ غَيْرِ التِّرْمِذِيِّ: "احْفَظْ اللَّهَ تَجِدْهُ أمامك، تَعَرَّفْ إلَى اللَّهِ فِي الرَّخَاءِ يَعْرِفُك فِي الشِّدَّةِ، وَاعْلَمْ أَنَّ مَا أَخْطَأَك لَمْ يَكُنْ لِيُصِيبَك، وَمَا أَصَابَك لَمْ يَكُنْ لِيُخْطِئَك، وَاعْلَمْ أَنَّ النَّصْرَ مَعَ الصَّبْرِ، وَأَنْ الْفَرَجَ مَعَ الْكَرْبِ، وَأَنَّ مَعَ الْعُسْرِ يُسْرًا".

ஒரு நாள் நான் நபி (ஸல்) அவர்களுடன் வாகனத்தில் பின்னால் இருந்தேன்.அப்போது பின்வருமாறு என்னிடம் கூறினார்கள்.

மகனே ! உனக்கு சில வார்த்தைகளை கற்றுத் தருகிறேன்.

நீ அல்லாஹ்வை மனதில் கொள், அல்லாஹ் உன்னை காப்பாற்றுவான். அல்லாஹ்வை மனதில் கொள். அவனை உனக்கு முன்னால் காண்பாய். நீ கேட்டால் அல்லாஹ்விடம் கேள். உதவி தேடினால் அல்லாஹ்விடம் உதவி தேடு. உனக்கு ஒரு நன்மையை செய்யவேண்டும் என்று சமூகம் ஒன்று சேர்ந்தாலும் அல்லாஹ் உனக்கு விதித்ததை தவிர எந்த நன்மையையும் உனக்கு வந்து சேராது. உனக்கு ஒரு தீமையை செய்யவேண்டும் என்று சமூகம் ஒன்று சேர்ந்தாலும் அல்லாஹ் உனக்கு விதித்ததை தவிர எந்த தீமையையும் உனக்கு வந்து சேராது. எழுது கோல்கள் உயர்த்தப்பட்டு ஏடுகள் மூடப்பட்டு விட்டன.

என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ்(ரலி) (நூல்: திர்மிதி)

திர்மிதி யில் வரும் மற்றொரு அறிவிப்பில்

நீ செழிப்பாக இருக்கும் போது அல்லாஹ்வை நினைவில் கொள், நீ கஷ்டத்தில் இருக்கும் போது அல்லாஹ் உன்னை நினைவில் கொள்வான்.

உன்னை விட்டும் தவறிப் போன எந்தவொன்றும் உனக்கு எதுவும் செய்ய முடியாது. உன்னை வந்தடைந்த எந்தவொன்றும் உன்னை விட்டும் தவறிப் போகாது என்பதை அறிந்து கொள்.

பொறுமையுடன் தான் உதவி இருக்கிறது என்பதை அறிந்து கொள் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்

## الحديث العشرون

عَنْ ابْنِ مَسْعُودٍ عُقْبَةَ بْنِ عَمْرٍو الْأَنْصَارِيِّ الْبَدْرِيِّ ﷺ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ "إنَّ مِمَّا أَدْرَكَ النَّاسُ مِنْ كَلَامِ النُّبُوَّةِ الْأُولَى: إذَا لَمْ تَسْتَحِ فَاصْنَعْ مَا شِئْت" .

رَوَاهُ الْبُخَارِيُّ

முன்தைய தூதுத்துவத்திலிருந்து மக்கள் பெற்ற செய்திகளில் ஒன்று உனக்கு வெட்கம் இல்லை என்றால் விரும்பியதை செய்து கொள் என்பதாகும் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.அறிவிப்பவர்; இப்னு மஸ்ஊத் உக்பத் இப்னு அம்ரு அல் அன்சாரி அல்பத்ரி (ரலி) நூல்: புகாரி

## الحديث الحادي والعشرون

عَنْ أَبِي عَمْرٍو وَقِيلَ: أَبِي عَمْرَةَ سُفْيَانَ بْنِ عَبْدِ اللَّهِ ﷺ قَالَ:

"قُلْت: يَا رَسُولَ اللَّهِ! قُلْ لِي فِي الْإِسْلَامِ قَوْلًا لَا أَسْأَلُ عَنْهُ أَحَدًا غَيْرَك؛

قَالَ: قُلْ: آمَنْت بِاَللَّهِ ثُمَّ اسْتَقِمْ" . رَوَاهُ مُسْلِمٌ ]رقم:38[.

அல்லாஹ்வின் தூதரே யாரிடத்திலும் கேட்கத் தேவையில்லாத வகையில் இஸ்லாத்தைப் பற்றி எனக்கு கூறுங்களேன்

என்று நான் கேட்டேன். அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்கிறேன் என க்கூறி பிறகு அதில் உறுதியாக இரு என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: அபூஅம்ரு(ரலி) நூல்: முஸ்லிம்

## الحديث الثاني والعشرون

عَنْ أَبِي عَبْدِ اللَّهِ جَابِرِ بْنِ عَبْدِ اللَّهِ الْأَنْصَارِيِّ رَضِيَ اللَّهُ عَنْهُمَا: "أَنَّ رَجُلًا سَأَلَ رَسُولَ اللَّهِ ﷺ فَقَالَ: أَرَأَيْت إذَا صَلَّيْت الْمَكْتُوبَاتِ، وَصُمْت رَمَضَانَ، وَأَحْلَلْت الْحَلَالَ، وَحَرَّمْت الْحَرَامَ، وَلَمْ أَزِدْ عَلَى ذَلِكَ شَيْئًا؛ أَأَدْخُلُ الْجَنَّةَ؟ قَالَ: نَعَمْ". رَوَاهُ مُسْلِمٌ.

ஒரு மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் :

நான் கடமையாக்கப்பட்ட தொழுகைகளை நிறைவேற்றுகிறேன். ரமழானில் நோன்பு நோற்கிறேன். அனுமதிக்கப்பட்ட (ஹலாலான வைகளை) ஏற்று நடக்கிறேன். தடுக்கப்பட்ட வைகளை (ஹராமானவைகளை) தவிர்ந்து

நடக்கிறேன். இதற்கு மேல் நான் எதுவும்செய்ய வில்லை. இந்த நிலையில் நான் சுவனம் நுழைவேனா? என்று கேட்டார்

அதற்கு நபி(ஸல்) அவர்கள் ஆம் என கூறினார்கள்.

அறிவிப்பவர்:அபூஅப்துல்லாஹ் ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் அல் அன்சாரி(ரலி) நூல்: முஸ்லிம்

## الحديث الثالث والعشرون

عَنْ أَبِي مَالِكٍ الْحَارِثِ بْنِ عَاصِمٍ الْأَشْعَرِيِّ ﷺ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ "الطَّهُورُ شَطْرُ الْإِيمَانِ، وَالْحَمْدُ لِلَّهِ تَمْلَأُ الْمِيزَانَ، وَسُبْحَانَ اللَّهِ وَالْحَمْدُ لِلَّهِ تَمْلَآنِ -أَوْ: تَمْلَأُ- مَا بَيْنَ السَّمَاءِ وَالْأَرْضِ، وَالصَّلَاةُ نُورٌ، وَالصَّدَقَةُ بُرْهَانٌ، وَالصَّبْرُ ضِيَاءٌ، وَالْقُرْآنُ حُجَّةٌ لَك أَوْ عَلَيْك، كُلُّ النَّاسِ يَغْدُو، فَبَائِعٌ نَفْسَهُ فَمُعْتِقُهَا أَوْ مُوبِقُهَا".

[ رَوَاهُ مُسْلِمٌ ]

சுத்தம் ஈமானின் (இறைநம்பிக்கையில்) ஒரு பகுதி யாகும்இறைநம்பிக்கையில் பாதியாகும். அல் ஹம்து லில்லாஹ் (எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே) என்(று துதிப்)பது (நன்மை

மற்றும் தீமைகளை நிறுக்கக்கூடிய) தராசை நிரப்பக் கூடியதாகும். சுப்ஹானல்லாஹி, வல் ஹம்து லில்லாஹி (அல்லாஹ் தூயவன் எல்லாப் புகழும் அவனுக்கே உரியது) என்(று துதிப்)பது வானங்கள் மற்றும் பூமிக்கிடையே யுள்ள இடத்தை நிரப்பிவிடக் கூடிய (நன்மை களைக் கொண்டதாகும். தொழுகை (வழிகாட்டும்) ஒளியாகும். தர்மம் சான்றாகும். பொறுமை வெளிச்சமாகும். குர்ஆன் உனக்கு சாதகமான அல்லது பாதகமான சான்றாகும். மக்கள் அனை வரும் காலையில் புறப்பட்டுச் சென்று தம்மை விற்பனை செய்கின்றனர். சிலர் தம்மை (இறைவனிடம் விற்று நரகத்திலிருந்து தம்மை) விடுவித்துக் கொள்கின்றனர். வேறு சிலர் (ஷைத்தானிடம் விற்று) தம்மை அழித்துக் கொள்கின்றனர் என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர். அபூமாலிக் அல்அஷ்அரீ (ரலி) அவர்கள்: அறிவிக்கிறார்கள்.( நூல்முஸ்லிம்)

## الحديث الرابع والعشرون

عَنْ أَبِي ذَرٍّ الْغِفَارِيِّ ﵁ عَنْ النَّبِيِّ ﷺ فِيمَا يَرْوِيهِ عَنْ رَبِّهِ تَبَارَكَ وَتَعَالَى، أَنَّهُ قَالَ: "يَا عِبَادِي: إنِّي حَرَّمْت الظُّلْمَ عَلَى نَفْسِي، وَجَعَلْته بَيْنَكُمْ مُحَرَّمًا؛ فَلَا تَظَالَمُوا. يَا عِبَادِي! كُلُّكُمْ ضَالٌّ إلَّا مَنْ هَدَيْته، فَاسْتَهْدُونِي أَهْدِكُمْ. يَا عِبَادِي! كُلُّكُمْ جَائِعٌ إلَّا مَنْ أَطْعَمْته، فَاسْتَطْعِمُونِي أُطْعِمْكُمْ. يَا عِبَادِي! كُلُّكُمْ عَارٍ إلَّا مَنْ كَسَوْته، فَاسْتَكْسُونِي أَكْسُكُمْ. يَا عِبَادِي! إنَّكُمْ تُخْطِئُونَ بِاللَّيْلِ وَالنَّهَارِ، وَأَنَا أَغْفِرُ الذُّنُوبَ جَمِيعًا؛ فَاسْتَغْفِرُونِي أَغْفِرْ لَكُمْ. يَا عِبَادِي! إنَّكُمْ لَنْ تَبْلُغُوا ضُرِّي فَتَضُرُّونِي، وَلَنْ تَبْلُغُوا نَفْعِي فَتَنْفَعُونِي. يَا عِبَادِي! لَوْ أَنَّ أَوَّلَكُمْ وَآخِرَكُمْ وَإِنْسَكُمْ وَجِنَّكُمْ كَانُوا عَلَى أَتْقَى قَلْبِ رَجُلٍ وَاحِدٍ مِنْكُمْ، مَا زَادَ ذَلِكَ فِي مُلْكِي شَيْئًا. يَا عِبَادِي! لَوْ أَنَّ أَوَّلَكُمْ وَآخِرَكُمْ وَإِنْسَكُمْ وَجِنَّكُمْ كَانُوا عَلَى أَفْجَرِ قَلْبِ رَجُلٍ وَاحِدٍ مِنْكُمْ، مَا نَقَصَ ذَلِكَ مِنْ مُلْكِي شَيْئًا. يَا عِبَادِي! لَوْ أَنَّ أَوَّلَكُمْ وَآخِرَكُمْ وَإِنْسَكُمْ وَجِنَّكُمْ قَامُوا فِي صَعِيدٍ وَاحِدٍ، فَسَأَلُونِي، فَأَعْطَيْت كُلَّ وَاحِدٍ مَسْأَلَته، مَا نَقَصَ ذَلِكَ مِمَّا عِنْدِي إلَّا كَمَا يَنْقُصُ الْمِخْيَطُ إذَا أُدْخِلَ الْبَحْرَ. يَا عِبَادِي! إنَّمَا هِيَ أَعْمَالُكُمْ أُحْصِيهَا لَكُمْ، ثُمَّ أُوَفِّيكُمْ إيَّاهَا؛ فَمَنْ وَجَدَ خَيْرًا فَلْيَحْمَدْ اللَّهَ، وَمَنْ وَجَدَ غَيْرَ ذَلِكَ فَلَا يَلُومَن إلَّا نَفْسَهُ".رَوَاهُ مُسْلِمٌ ]

வளமும் உயர்வும் மிக்க அல்லாஹ் பின்வருமாறு கூறியதாக நபி (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள்:

என் அடியார்களே! அநீதியிழைப்பதை எனக்கு நானே தடை செய்து கொண்டேன். அதை உங்களிடையேயும் தடை செய்யப் பட்டதாக ஆக்கிவிட்டேன். ஆகவே, நீங்கள் ஒருவருக்கொருவர் அநீதியிழைக்காதீர்கள். என்அடியார்களே! உங்களில் யாரை நான் நேர் வழியில் செலுத்தினேனோ அவர்களைத் தவிர மற்ற அனைவரும் வழி தவறியவர்களே. ஆகவே, நேர் வழியில் செலுத்துமாறு என்னிடமே கேளுங்கள். உங்களை நான் நேர் வழியில் செலுத்துவேன்.

என் அடியார்களே! உங்களில் யாருக்கு நான் உணவளித்துள்ளேனோ அவர்களைத் தவிர மற்ற அனைவரும் பசித்திருப்பவர்களே. ஆகவே, என்னிடமே உணவைக் கேளுங்கள். நான் உங்களுக்கு உணவளிக்கிறேன். என் அடியார்களே! உங்களில் யாருக்கு நான் ஆடையணிவித்துள்ளேனோ அவர்களைத் தவிர மற்ற அனைவரும் நிர்வாணமானவர்

களே. ஆகவே, என்னிடமே ஆடை கேளுங்கள். நான் உங்களுக்கு ஆடையணிவிக்கிறேன். என் அடியார்களே! நீங்கள் இரவிலும் பகலிலும் பாவம் செய்கிறீர்கள். நான் அனைத்துப் பாவங்களையும் மறைத்துக் கொண்டிருக்கி றேன். ஆகவே, என்னிடமே பாவமன்னிப்புக் கோருங்கள். நான் உங்கள் பாவங்களை மன்னிக்கிறேன். என்அடியார்களே! உங்களால் எனக்கு எவ்விதத் தீங்கும் அளிக்க முடியாது; மேலும், உங்களால் எனக்கு எவ்விதப் பயனும்அளிக்கமுடியாது.

என்அடியார்களே! உங்களில் முன் சென்றவர்கள், பின்னால் வருபவர்கள், மனிதர்கள், ஜின்கள் ஆகிய அனைவரும் உங்களில் மிகவும் இறையச்சமுடைய ஒரு மனிதரைப் போன்று மாறிவிட்டாலும் அது எனது ஆட்சியில் எதையும் அதிகமாக்கி விடுவதில்லை.

என் அடியார்களே! உங்களில் முன் சென்ற வர்கள் பின்னால் வருபவர்கள் மனிதர்கள், ஜின்கள் ஆகிய அனைவரும் மிகவும் தீயமனிதர் ஒருவரைப் போன்று மாறிவிட்டாலும் அது

எனது ஆட்சியில் எதையும் குறைத்து விடப்போவதில்லை.

என்அடியார்களே! உங்களில் உங்களில் முன் சென்றவர்கள் பின்னால் வருபவர்கள் மனிதர்கள், ஜின்கள் ஆகிய அனைவரும் திறந்த வெளியில் நின்று என்னிடத்தில் (தத்தம் தேவை களைக்) கோரினாலும் ஒவ்வொரு மனிதருக்கும் அவர் கேட்பதை நான் கொடுப்பேன். அது என்னிடத்தில் இருப்பவற்றில் எதையும் குறைத்து விடுவதில்லை; கடலில் நுழை(த்து எடு)க்கப்பட்ட ஊசி (தண்ணீரைக்) குறைப்ப தைப் போன்றே தவிர (குறைக்காது)! என்அடியார்களே! நீங்கள் செய்து வரும் நல்லறங்களை நான் உங்களுக்காக எண்ணிக் கணக்கிடுகிறேன். பிறகு அதன் நற்பலனை நான் முழுமையாக வழங்குவேன். நல்லதைக் கண்டவர் அல்லாஹ்வைப் புகழட்டும். அதல்லாததைக் கண்டவர் தம்மையே நொந்து கொள்ளட்டும்!.

- அறிவிப்பவர்: அபூதர் (ரலி) அவர்கள்: அறிவிக்கிறார்கள்.( நூல்முஸ்லிம்)

## الحديث الخامس والعشرون

عَنْ أَبِي ذَرٍّ ﷺ أَيْضًا، "أَنَّ نَاسًا مِنْ أَصْحَابِ رَسُولِ اللَّهِ ﷺ قَالُوا لِلنَّبِيِّ ﷺ يَا رَسُولَ اللَّهِ ذَهَبَ أَهْلُ الدُّثُورِ بِالْأُجُورِ؛ يُصَلُّونَ كَمَا نُصَلِّي، وَيَصُومُونَ كَمَا نَصُومُ، وَيَتَصَدَّقُونَ بِفُضُولِ أَمْوَالِهِمْ. قَالَ: أَوَلَيْسَ قَدْ جَعَلَ اللَّهُ لَكُمْ مَا تَصَّدَّقُونَ؟ إنَّ بِكُلِّ تَسْبِيحَةٍ صَدَقَةً، وَكُلِّ تَكْبِيرَةٍ صَدَقَةً، وَكُلِّ تَحْمِيدَةٍ صَدَقَةً، وَكُلِّ تَهْلِيلَةٍ صَدَقَةً، وَأَمْرٌ بِمَعْرُوفٍ صَدَقَةٌ، وَنَهْيٌ عَنْ مُنْكَرٍ صَدَقَةٌ، وَفِي بُضْعِ أَحَدِكُمْ صَدَقَةٌ. قَالُوا: يَا رَسُولَ اللَّهِ أَيَأْتِي أَحَدُنَا شَهْوَتَهُ وَيَكُونُ لَهُ فِيهَا أَجْرٌ؟ قَالَ: أَرَأَيْتُمْ لَوْ وَضَعَهَا فِي حَرَامٍ أَكَانَ عَلَيْهِ وِزْرٌ؟ فَكَذَلِكَ إذَا وَضَعَهَا فِي الْحَلَالِ، كَانَ لَهُ أَجْرٌ".

[رَوَاهُ مُسْلِمٌ ]

நபித்தோழர்களில் (ஏழைகளான) சிலர் நபி (ஸல்) அவர்களிடம் "அல்லாஹ்வின் தூதரே! வசதி படைத்தோர் நன்மைகளை (தட்டி)க் கொண்டு போய்விடுகின்றனர். நாங்கள் தொழுவதைப் போன்றே அவர்களும்

தொழுகின்றனர்; நாங்கள் நோன்பு நோற்ப தைப் போன்றே அவர்களும் நோன்பு நோற்கின் றனர்; (ஆனால், அவர்கள்) தங்களது அதிகப் படியான செல்வங்களைத் தானதர்மம் செய்கின்றனர். (அவ்வாறு தானதர்மங்கள் செய்ய எங்களிடம் வசதி இல்லையே!)" என்று கூறினர். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “நீங்களும் தர்மம் செய்வதற்கான (முகாந்தரத்) தை அல்லாஹ் உங்களுக்கு ஏற்படுத்த வில்லையா? அல்லாஹ் வை துதிக்கும் ஒவ்வொரு (சுப்ஹானல்லாஹ்) துதிச் சொல்லும் தர்மமாகும்; அல்லாஹ்வை பெருமைப்படுத்தும் ஒவ்வொரு (அல்லாஹு அக்பர்) சொல்லும் தர்மமாகும்; ஒவ்வொரு (அல்ஹம்து லில்லாஹ்) புகழ் மாலையும் தர்மமாகும்; ஒவ்வொரு (லா இலாஹ இல்லல்லாஹ்) ஓரிறை உறுதி மொழியும் தர்மமாகும்; நல்லதை ஏவுதலும் தர்மமே; தீமையைத் தடுத்தலும் தர்மமே; உங்களில் ஒருவர் தமது மனைவியுடன் இல்லறத்தில் இணைவதும் தர்மமாகும் என்று கூறினார்கள். மக்கள், “அல்லாஹ்வின் தூதரே! எங்களில் ஒருவர் (தம் துணைவியிடம்) இச்சை களைத் தீர்த்துக்கொள்வதற்கும் நன்மை

கிடைக்குமா?" என்று கேட்டார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், "(நீங்களே) சொல்லுங்கள்: தடைசெய்யப்பட்ட வழியில் அவர் தமது இச்சையைத் தீர்த்துக்கொண்டால் அவருக்குக் குற்றம் உண்டல்லவா! அவ்வாறே அனுமதிக் கப் பட்ட வழியில் அவர் தமது இச்சையை நிறை வேற்றிக் கொள்ளும்போது அதற்காக அவருக்கு நன்மை கிடைக்கவே செய்யும்" என்று விடையளித்தார்கள். அறிவிப்பவர்: அபூதர் கிபாரி(ரலி) நூல்: முஸ்லிம்)

## الحديث السادس والعشرون

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ "كُلُّ سُلَامَى مِنْ النَّاسِ عَلَيْهِ صَدَقَةٌ، كُلَّ يَوْمٍ تَطْلُعُ فِيهِ الشَّمْسُ تَعْدِلُ بَيْنَ اثْنَيْنِ صَدَقَةٌ، وَتُعِينُ الرَّجُلَ فِي دَابَّتِهِ فَتَحْمِلُهُ عَلَيْهَا أَوْ تَرْفَعُ لَهُ عَلَيْهَا مَتَاعَهُ صَدَقَةٌ، وَالْكَلِمَةُ الطَّيِّبَةُ صَدَقَةٌ، وَبِكُلِّ خُطْوَةٍ تَمْشِيهَا إلَى الصَّلَاةِ صَدَقَةٌ، وَتُمِيطُ الْأَذَى عَنْ الطَّرِيقِ صَدَقَةٌ". رَوَاهُ الْبُخَارِيُّ ، وَمُسْلِمٌ

மனிதர்கள் சூரியன் உதிக்கின்ற ஒவ்வொரு நாளிலும் தம்முடைய ஒவ்வொரு மூட்டு எலும்புக்காகவும் தர்மம் செய்வது கடமையாகும். இருவருக்கிடையே நீதி செலுத்துவதும் தர்மமாகும். ஒருவர் தமது வாகனத்தின் மீது ஏறி அமர உதவுவதும் அல்லது அவரது பயணச் சுமைகளை அதில் ஏற்றிவிடுவதும் தர்மமாகும். நல்ல வார்த்தையும் தர்மமாகும். ஒருவர் தொழுகைக்குச் செல்ல எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் தர்மமாகும். தீங்கு தரும் பொருளைப் பாதையிலிருந்து அகற்றுவதும்

ஒரு தர்மமேயாகும். என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அறிவிப்பவர் அபூ ஹுரைரா (ரலி) அவர்கள் நூல்: புகாரி முஸ்லிம்

## الحديث السابع والعشرون

عَنْ النَّوَّاسِ بْنِ سَمْعَانَ ﷺ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ: "الْبِرُّ حُسْنُ الْخُلُقِ، وَالْإِثْمُ مَا حَاكَ فِي صَدْرِك، وَكَرِهْت أَنْ يَطَّلِعَ عَلَيْهِ النَّاسُ" رَوَاهُ مُسْلِمٌ

[

நன்மை என்பது நற்பண்பாகும் பாவம் என்பது உன் உள்ளத்தை உறுத்தக் கூடியதும் மக்கள் கவனித்துவிடுவார்களோ என்று நீ வெறுப்பதுமாகும் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: நவாஸ் இப்னு ஸம்ஆன்(ரலி) நூல்:முஸ்லிம்

. وَعَنْ وَابِصَةَ بْنِ مَعْبَدٍ ﵁ قَالَ: أَتَيْت رَسُولَ اللَّهِ ﷺ فَقَالَ: "جِئْتَ تَسْأَلُ عَنْ الْبِرِّ؟ قُلْت: نَعَمْ. فقَالَ: استفت قلبك، الْبِرُّ مَا اطْمَأَنَّتْ إلَيْهِ النَّفْسُ، وَاطْمَأَنَّ إلَيْهِ الْقَلْبُ، وَالْإِثْمُ مَا حَاكَ فِي النَّفْسِ وَتَرَدَّدَ فِي الصَّدْرِ، وَإِنْ أَفْتَاك النَّاسُ وَأَفْتَوْك" .

حَدِيثٌ حَسَنٌ، رَوَيْنَاهُ فِي مُسْنَدَي الْإِمَامَيْنِ أَحْمَدَ بْنِ حَنْبَلٍ وَالدَّارِمِيّ بِإِسْنَادٍ حَسَنٍ.

வாபிஸயா இப்னு மஃறபத்(ரலி) அவர்கள் கூறுகிறார்கள் நான் நபி(ஸல்) அவர்களிடம் வந்தேன் அப்போது அவர்கள் நன்மையைப் பற்றி கேட்பதற்காக வா வந்தீர்? எனக் கேட்டார் கள். நான் ஆம் என்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் உன் உள்ளத்தை கேட்டு

பாரும். நன்மை என்பது ஆத்மா திருப்தியடைவதும், உள்ளம் அமைதியடைவதுமாகும். பாவம் என்பது (அது குறித்து) மக்கள் தீர்ப்பளிப்பதும், தீர்ப்பளிப்பவர்கள் உனக்கு தீர்பளிப்பதும், ஆத்மாவை உறுத்தக் கூடியதும், உள்ளத்தில் அடிக்கடி வந்து போகக் கூடியதுமாகும் என கூறினார்கள் (நூல்: அஹ்மத் தாரமி)

## الحديث الثامن والعشرون

عَنْ أَبِي نَجِيحٍ الْعِرْبَاضِ بْنِ سَارِيَةَ ﵁ قَالَ: "وَعَظَنَا رَسُولُ اللَّهِ ﷺ مَوْعِظَةً وَجِلَتْ مِنْهَا الْقُلُوبُ، وَذَرَفَتْ مِنْهَا الْعُيُونُ، فَقُلْنَا: يَا رَسُولَ اللَّهِ! كَأَنَّهَا مَوْعِظَةُ مُوَدِّعٍ فَأَوْصِنَا، قَالَ: أُوصِيكُمْ بِتَقْوَى اللَّهِ، وَالسَّمْعِ وَالطَّاعَةِ وَإِنْ تَأَمَّرَ عَلَيْكُمْ عَبْدٌ، فَإِنَّهُ مَنْ يَعِشْ مِنْكُمْ فَسَيَرَى اخْتِلَافًا كَثِيرًا، فَعَلَيْكُمْ بِسُنَّتِي وَسُنَّةِ الْخُلَفَاءِ الرَّاشِدِينَ الْمَهْدِيينَ، عَضُّوا عَلَيْهَا بِالنَّوَاجِذِ، وَإِيَّاكُمْ وَمُحْدَثَاتِ الْأُمُورِ؛ فَإِنَّ كُلَّ بِدْعَةٍ ضَلَالَةٌ".

رَوَاهُ أَبُو دَاوُدَ وَاَلتِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

(ஒரு முறை ) நபி (ஸல்) அவர்கள் எங்களுக்கு ஒரு உபதேசம் செய்தார்கள். அதனைக் கேட்டு எங்கள் உள்ளங்கள் நடுநடுங்கின. கண்களிலிருந்து கண்ணீர் வடிந்தன. அப்போது நாங்கள் அல்லாஹ்வின் தூதரே (எங்களை விட்டும்) விடை பெற்று செல்லும் உபதேசம் போன்று உள்ளது எனவே எங்களுக்கு உபதேசியுங்கள் என்றோம்.

அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள் ஒரு அடிமை உங்களுக்கு தலைவராக நியமிக்கப் பட்டாலும் அவருக்குக் கட்டுப்படுங்கள். உங்களில் அதிக நாட்கள் வாழ்பவர் அதிக கருத்து வேறுபாடுகளை காண்பார். அப்போது எனது வழிமுறையையும் நேர்வழிப் பெற்ற கலீபாக் (ஆட்சியாளர்)களின் முறையையும் பற்றிப் பிடியுங்கள். அவைகளை உங்கள் கடவாய் பற்களால் பற்றிப் பிடியுங்கள். மார்க்கத்தில் புதுமைகளை உண்டாக்குவதை விட்டும் எச்சரிக்கின்றேன். நிச்சயமாக ஒவ்வொரு புதுமைகளும் நூதனங்களாகும்.

ஒவ்வொரு நூதனங்களும் வழிகேடாகும். ஒவ்வொரு வழிகேடும் நரகத்தில் சேர்க்கும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: அபூநஜீஹ் அல்இர்பால் இப்னு ஸாரியா (ரலி) நூல்:அபூதாவுத் திர்மிதி

## الحديث التاسع والعشرون

عَنْ مُعَاذِ بْنِ جَبَلٍ ﷺ قَالَ: قُلْت يَا رَسُولَ اللَّهِ! أَخْبِرْنِي بِعَمَلٍ يُدْخِلُنِي الْجَنَّةَ وَيُبَاعِدْنِي مِنْ النَّارِ، قَالَ: "لَقَدْ سَأَلْت عَنْ عَظِيمٍ، وَإِنَّهُ لَيَسِيرٌ عَلَى مَنْ يَسَّرَهُ اللَّهُ عَلَيْهِ: تَعْبُدُ اللَّهَ لَا تُشْرِكْ بِهِ شَيْئًا، وَتُقِيمُ الصَّلَاةَ، وَتُؤْتِي الزَّكَاةَ، وَتَصُومُ رَمَضَانَ، وَتَحُجُّ الْبَيْتَ، ثُمَّ قَالَ: أَلَا أَدُلُّك عَلَى أَبْوَابِ الْخَيْرِ؟ الصَّوْمُ جُنَّةٌ، وَالصَّدَقَةُ تُطْفِئُ الْخَطِيئَةَ كَمَا يُطْفِئُ الْمَاءُ النَّارَ، وَصَلَاةُ الرَّجُلِ فِي جَوْفِ اللَّيْلِ، ثُمَّ تَلَا: " تَتَجَافَى جُنُوبُهُمْ عَنِ الْمَضَاجِعِ " حَتَّى بَلَغَ "يَعْمَلُونَ"، ثُمَّ قَالَ: أَلَا أُخْبِرُك بِرَأْسِ الْأَمْرِ وَعَمُودِهِ وَذُرْوَةِ سَنَامِهِ؟ قُلْت: بَلَى يَا رَسُولَ اللَّهِ. قَالَ: رَأْسُ الْأَمْرِ الْإِسْلَامُ،

وَعَمُودُهُ الصَّلَاةُ، وَذُرْوَةُ سَنَامِهِ الْجِهَادُ، ثُمَّ قَالَ: أَلَا أُخْبِرُك بِمَلَاكِ ذَلِكَ

كُلِّهِ؟ فقُلْت: بَلَى يَا رَسُولَ اللَّهِ! فَأَخَذَ بِلِسَانِهِ وَقَالَ: كُفَّ عَلَيْك هَذَا.

قُلْت: يَا نَبِيَّ اللَّهِ وَإِنَّا لَمُؤَاخَذُونَ بِمَا نَتَكَلَّمُ بِهِ؟ فَقَالَ: ثَكِلَتْك أُمُّك

وَهَلْ يَكُبُّ النَّاسَ عَلَى وُجُوهِهِمْ -أَوْ قَالَ عَلَى مَنَاخِرِهِمْ- إلَّا حَصَائِدُ

أَلْسِنَتِهِمْ؟!" رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

அல்லாஹ்வின் தூதரே என்னை சுவர்க்கத்தில் நுழைவிக்கச் செய்து நரகத்திலிருந்து தூரமாக்கக்கூடியஒரு செயலை சொல்லித்தாருங்களேன் என்றேன். அப்போது நபி (ஸல்) அவர்கள் மிகப் பரிய விஷயம் பற்றி என்னிடம் கேட்டுள்ளீர். அல்லாஹ் அதனை யாருக்கு இலகுவாக்கினானோ அவருக்கு அது இலகுவாகும் அல்லாஹ்வுக்கு எதனையும் இணையாக்காது அல்லாஹ்வை நீ வணங்க வேண்டும். தொழுகையை நிலை நாட்ட வேண்டும். ஸகாத்தை கொடுத்து வர வேண்டும். ரமழானில் நோன்பு நோற்க வேண்டும் இறை இல்லத்திற்குச் சென்று ஹஜ் செய்யவேண்டும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் பிறகு

நன்மைகளின் வாயல்களை உனக்கு அறிவித்துத் தரட்டுமா எனக் கேட்டு விட்டு நீர் நெருப்பை அணைப்பது போல் தர்மம் பாவத்தை அழித்து விடும் இரவில் நின்று வணங்குவதும் (ஆகிய மூன்று காரியங்களாகும்) எனக் கூறி "அவர்களது விலாப்புறங்கள் படுக்கைகளை விட்டும் விலகியிருக்க, அவர்கள் தமது இரட்சகனை அச்சத்துடனும், ஆதரவுடனும் பிரார்த்திப்பார்கள். மேலும், நாம் அவர்களுக்கு வழங்கியவற்றிலிருந்து (நல்லறங்களில்) செலவும் செய்வார்கள்.

எனவே, அவர்கள் செய்துக்கொண்டிருந்தவற்றுக்குக் கூலியாக அவர்களுக்கு மறைத்து வைக்கப்பட்டிருக்கும் கண் குளிர்ச்சியை எந்த ஆன்மாவும் அறிந்து கொள்ளாது." (32:16-17) என்ற வசனத்தை ஓதினார்கள். பிறகு அனைத்து காரியங்களுக்கும் தலையானதையும் அனைத்து காரியங்களுக்கும் தூணாக இருப்பதையும் உயர்வானதையும் உனக்கு அறிவிக்கட்டுமா? எனக் கேட்டார்கள். நான் ஆம் அல்லாஹ்வின் தூதரே எனக் கூறினேன்

தலையாகக் கடமை இஸ்லாமாகும். தூணாக இருப்பது தொழுகையாகும். உயர்வானது ஜிஹாதாகும் என்றார்கள். பிறகு இவைகள் அனைத்தையும் உள்ளடக்கும் விடயத்தை சொல்லித் தரட்டுமா என்று கேட்டார்கள் நான் ஆம் அல்லாஹ்வின் தூதரே என்றேன். தமது நாவை பிடித்து இதனை பேணிக் கொள் என்றார்கள். அல்லாஹ்வின் தூதரே இதன் மூலம் நாங்கள் பேசுவதற்காகவும் தண்டிக்கப் படுவோமா என்று கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் முஆதே! உன் தாய் உன்னை இழக்கட்டும் மனிதர்கள் தம் நாவால் அறுவடை செய்ததைத் தவிர வேறெதுவும் அவர்களை முகங்குப்புற நரகில் தள்ளுமா? எனக் கேட்டார்கள்

அறிவிப்பவர் :முஆத் (ரலி) நூல்: திரிமிதி

## الحديث الثلاثون

عَنْ أَبِي ثَعْلَبَةَ الْخُشَنِيِّ جُرْثُومِ بن نَاشِبٍ ﷺ عَنْ رَسُولِ اللَّهِ ﷺ

قَال: "إنَّ اللَّهَ تَعَالَى فَرَضَ فَرَائِضَ فَلَا تُضَيِّعُوهَا، وَحَدَّ حُدُودًا فَلَا

تَعْتَدُوهَا، وَحَرَّمَ أَشْيَاءَ فَلَا تَنْتَهِكُوهَا، وَسَكَتَ عَنْ أَشْيَاءَ رَحْمَةً لَكُمْ غَيْرَ نِسْيَانٍ فَلَا تَبْحَثُوا عَنْهَا".

حَدِيثٌ حَسَنٌ، رَوَاهُ الدَّارَقُطْنِيّ "]في سننه"، وَغَيْرُهُ.

நிச்சயமாக அல்லாஹ் மார்கத்தின் கடமைகளை விதியாக்கியுள்ளான், அவைகளை வீணாக்காதீர்கள். எல்லைகளை வகுத்துள் ளான், அவைகளை தாண்டாதீர்கள். சில விடயங்களை தடை செய்துள்ளான், அவைகளை மீறாதீர்கள். சில விஷயங்களில் மௌனமாக இருக்கின்றான், அவை உங்களுக்கு அருளாகுமே தவிர மறதியின் காரணமாக அல்ல. எனவே அவைகளை ஆய்வு செய்யாதீர்கள் என நபி அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: அபூ ஸஹ்லபா (ரலி) நூல்: தாரகுத்னி)

## الحديث الحادي والثلاثون

عَنْ أَبِي الْعَبَّاسِ سَهْلِ بْنِ سَعْدٍ السَّاعِدِيّ ﷺ قَالَ: جَاءَ رَجُلٌ إلَى النَّبِيِّ ﷺ فَقَالَ: يَا رَسُولَ اللَّهِ! دُلَّنِي عَلَى عَمَلٍ إذَا عَمِلْتُهُ أَحَبَّنِي اللَّهُ وَأَحَبَّنِي النَّاسُ؛ فَقَالَ: "ازْهَدْ فِي الدُّنْيَا يُحِبُّك اللَّهُ، وَازْهَدْ فِيمَا عِنْدَ النَّاسِ يُحِبُّك النَّاسُ" .

حديث حسن، رَوَاهُ ابْنُ مَاجَهْ وَغَيْرُهُ بِأَسَانِيدَ حَسَنَةٍ.

ஒரு மனிதர் நபி(ஸல்) அவர்களிடம் வந்து அல்லாஹ்வின் தூதரே எனக்கு ஒரு (அமலை) செயலை சொல்லித் தாருங்கள் அதனை நான் செய்தால் அல்லாஹ்வும் மக்களும் என்னை நேசிக்க வேண்டும் என்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள் நீ உலகில் பற்றற்று இரு, அல்லாஹ் உன்னை நேசிப்பான். மக்களி டத்தில் உள்ளவற்றில் (அவர்கள் சொந்தம் கொண்டாடு பவற்றில்) எதுவும் தேவையற்று இரு, மக்கள் உன்னை நேசிப்பார்கள் எனக் கூறினார்கள் அறிவிப்பவர்: அபூல் அப்பாஸ்

ஸஹ்ல் இப்னி அஸ்ஸாஇதி (ரலி) நூல்: இப்னுமாஜா)

## الحديث الثاني والثلاثون

عَنْ أَبِي سَعِيدٍ سَعْدِ بْنِ مَالِكِ بْنِ سِنَانٍ الْخُدْرِيّ ﷺ أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: " لَا ضَرَرَ وَلَا ضِرَارَ" . حَدِيثٌ حَسَنٌ، رَوَاهُ ابْنُ مَاجَهْ، وَالدَّارَقُطْنِيّ ، وَغَيْرُهُمَا مُسْنَدًا. وَرَوَاهُ مَالِكٌ فِي "الْمُوَطَّإِ" عَنْ عَمْرِو بْنِ يَحْيَى عَنْ أَبِيهِ عَنْ النَّبِيِّ ﷺ مُرْسَلًا، فَأَسْقَطَ أَبَا سَعِيدٍ، وَلَهُ طُرُقٌ يُقَوِّي بَعْضُهَا بَعْضًا.

தீங்கிழைக்கவும் கூடாது தீங்கிற்கு பழிவாங்கவும் கூடாது என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: அபூ ஸஹீத் ஸஹ்திப்னு மாலிக் இப்னி ஸினான்(ரலி) நூல்: இப்னு மாஜா தாரகுத்னி

## الحديث الثالث والثلاثون

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: "لَوْ يُعْطَى النَّاسُ بِدَعْوَاهُمْ لَادَّعَى رِجَالٌ أَمْوَالَ قَوْمٍ وَدِمَاءَهُمْ، لَكِنَّ الْبَيِّنَةَ عَلَى الْمُدَّعِي، وَالْيَمِينَ عَلَى مَنْ أَنْكَرَ" .

حَدِيثٌ حَسَنٌ، رَوَاهُ الْبَيْهَقِيّ ]في"السنن وَغَيْرُهُ هَكَذَا، وَبَعْضُهُ فِي "الصَّحِيحَيْنِ".

மக்கள் தம்முடையவை என்று சொந்தம் கொண்டாடுபவைகளை வழங்கக் கூடியதாக இருந்தால் அவர்கள் அடுத்தவர்களின் செல்வங்களையும் இரத்தங்களையும் கோருவார்கள். தன்னுடையது என்று உரிமை கொண்டாடக் கூடியவர் அதற்கான சான்றை சமர்பிக்க வேண்டும். அதனை மறுப்பவர் சத்தியம் செய்ய வேண்டும். என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி) நூல்: பைஹகி

## الحديث الرابع والثلاثون

عَنْ أَبِي سَعِيدٍ الْخُدْرِيِّ ﵁ قَالَ سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: "مَنْ رَأَى مِنْكُمْ مُنْكَرًا فَلْيُغَيِّرْهُ بِيَدِهِ، فَإِنْ لَمْ يَسْتَطِعْ فَبِلِسَانِهِ، فَإِنْ لَمْ يَسْتَطِعْ فَبِقَلْبِهِ، وَذَلِكَ أَضْعَفُ الْإِيمَانِ" . رَوَاهُ مُسْلِمٌ.

உங்களில் ஒருவர் தவறை காண்பவர் தனது கையினால் அதனை தடுக்கட்டும். அதற்கு முடியாது விட்டால் தனது நாவால் தடுக்கட்டும். அதற்கும் முடியாது விட்டால் தனது உள்ளத்தால் வெறுக்கட்டும் இது ஈமான் (இறை நம்பிக்கை யின்) கடைசி படித்தரமாகும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: அபூ ஸயீதுல் குத்ரி (ரலி) நூல்: முஸ்லிம்

## الحديث الخامس والثلاثون

عَنْ أَبِي هُرَيْرَةَ ﵁ قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ " لَا تَحَاسَدُوا، وَلَا تَنَاجَشُوا، وَلَا تَبَاغَضُوا، وَلَا تَدَابَرُوا، وَلَا يَبِعْ بَعْضُكُمْ عَلَى بَيْعِ بَعْضٍ، وَكُونُوا عِبَادَ اللَّهِ إخْوَانًا، الْمُسْلِمُ أَخُو الْمُسْلِمِ، لَا يَظْلِمُهُ، وَلَا يَخْذُلُهُ،

وَلَا يَكْذِبُهُ، وَلَا يَحْقِرُهُ، التَّقْوَى هَاهُنَا، وَيُشِيرُ إِلَى صَدْرِهِ ثَلَاثَ مَرَّاتٍ، بِحَسْبِ امْرِئٍ مِنْ الشَّرِّ أَنْ يَحْقِرَ أَخَاهُ الْمُسْلِمَ، كُلُّ الْمُسْلِمِ عَلَى الْمُسْلِمِ حَرَامٌ: دَمُهُ وَمَالُهُ وَعِرْضُهُ" .رَوَاهُ مُسْلِمٌ

ஒருவருக்கொருவர் பொறாமை கொள்ளாதீர்கள். (பிறரை அதிக விலை கொடுத்து வாங்க வைப்பதற்காக விற்பனைப் பொருளின்) விலையை ஏற்றிக் கேட்காதீர்கள். ஒருவருக்கொருவர் கோபம் கொள்ளாதீர்கள். ஒருவருக்கொருவர் பிணங்கிக்கொள்ளாதீர்கள். ஒருவர் வியாபாரம் செய்து கொண்டிருக்கும் போது மற்றவர் தலையிட்டு வியாபாரம் செய்ய வேண்டாம். (மாறாக) அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாக இருங்கள். ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமுக்குச் சகோதரர் ஆவார். அவர் தம் சகோதரருக்கு அநீதியிழைக்கவோ, அவருக்குத் துரோகமிழைக்கவோ, அவரைக் கேவலப் படுத்தவோ வேண்டாம். இறையச்சம் (தக்வா) இங்கே இருக்கிறது. (இதைக் கூறிய) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தமது நெஞ்சை நோக்கி மூன்று முறை சைகை

செய்தார்கள். ஒருவர் தம் சகோதர முஸ்லிமைக் கேவலப்படுத்துவதே அவருடைய தீமைக்குப் போதிய சான்றாகும். ஒவ்வொரு முஸ்லிமுக்கும் மற்ற முஸ்லிம்களின் உயிர், பொருள், மானம் ஆகியவை தடைசெய்யப்பட்டவையாகும். என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அறிவிப்பவர் அபூஹுரைரா (ரலி) அவர்கள் நூல்: புகாரி முஸ்லிம்

## الحديث السادس والثلاثون

عَنْ أَبِي هُرَيْرَةَ ﷺ عَنْ النَّبِيِّ ﷺ قَالَ: "مَنْ نَفَّسَ عَنْ مُؤْمِنٍ كُرْبَةً مِنْ كُرَبِ الدُّنْيَا نَفَّسَ اللَّهُ عَنْهُ كُرْبَةً مِنْ كُرَبِ يَوْمِ الْقِيَامَةِ، وَمَنْ يَسَّرَ عَلَى مُعْسِرٍ، يَسَّرَ اللَّهُ عَلَيْهِ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ، وَمَنْ سَتَرَ مُسْلِما سَتَرَهُ اللهُ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ ، وَاَللَّهُ فِي عَوْنِ الْعَبْدِ مَا كَانَ الْعَبْدُ فِي عَوْنِ أَخِيهِ، وَمَنْ سَلَكَ طَرِيقًا يَلْتَمِسُ فِيهِ عِلْمًا سَهَّلَ اللَّهُ لَهُ بِهِ طَرِيقًا إلَى الْجَنَّةِ، وَمَا اجْتَمَعَ قَوْمٌ فِي بَيْتٍ مِنْ بُيُوتِ اللَّهِ يَتْلُونَ كِتَابَ اللَّهِ، وَيَتَدَارَسُونَهُ

فِيمَا بَيْنَهُمْ؛ إِلَّا نَزَلَتْ عَلَيْهِمْ السَّكِينَةُ، وَغَشِيَتْهُمْ الرَّحْمَةُ، وَذَكَرَهُمْ اللَّهُ فِيمَنْ عِنْدَهُ، وَمَنْ أَبَطْأَ بِهِ عَمَلُهُ لَمْ يُسْرِعْ بِهِ نَسَبُهُ". رَوَاهُ مُسْلِمٌ.

யார் இம்மையில் ஓர் இறைநம்பிக்கை யாளரின் துன்பங்களில் ஒன்றை அகற்று கிறாரோ அவருடைய மறுமைத் துன்பங்களில் ஒன்றை அல்லாஹ் அகற்றுகிறான். யார் சிரமப்படுவோருக்கு உதவி செய்கிறாரோ அவருக்கு அல்லாஹ் இம்மையிலும் மறுமை யிலும் உதவி செய்கிறான். யார் ஒரு முஸ்லிமின் குறைகளை மறைக்கிறாரோ அவருடைய குறைகளை அல்லாஹ் இம்மை யிலும் மறுமையிலும் மறைக்கிறான். அடியான் தன் சகோதரன் ஒருவனுக்கு உதவி செய்துக் கொண்டிருக்கும் வரை அந்த அடியானுக்கு அல்லாஹ் உதவி செய்துகொண்டிருக்கிறான். யார் கல்வியைத் தேடி ஒரு பாதையில் நடக்கிறாரோ அவருக்கு அதன் மூலம் சொர்க்கத்திற்குச் செல்லும் பாதையை அல்லாஹ் எளிதாக்குகிறான். மக்கள் இறையில் லங்களில் ஒன்றில் ஒன்று கூடி, அல்லாஹ்வின் வேதத்தை ஓதிக்கொண்டும் அதை ஒருவருக்

கொருவர் படித்துக் கொடுத்துக் கொண்டும் இருந்தால், அவர்கள் மீது அமைதி இறங்கு கிறது. அவர்களை இறையருள் போர்த்திக் கொள்கிறது. அவர்களை வானவர்கள் சூழ்ந்துகொள்கின்றனர். மேலும் இறைவன், அவர்களைக் குறித்துத் தம்மிடம் இருப்போ ரிடம் (பெருமையுடன்) நினைவு கூருகிறான். அறச் செயல்களில் பின்தங்கிவிட்ட ஒருவரைக் குலச்சிறப்பு முன்னுக்குக் கொண்டு வந்து விடுவதில்லை. என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அறிவிப்பவர் அபூஹுரைரா (ரலி) அவர்கள் நூல்: புகாரி முஸ்லிம்

## الحديث السابع والثلاثون

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا عَنْ رَسُولِ اللَّهِ ﷺ فِيمَا يَرْوِيهِ عَنْ رَبِّهِ تَبَارَكَ وَتَعَالَى، قَالَ: "إنَّ اللَّهَ كَتَبَ الْحَسَنَاتِ وَالسَّيِّئَاتِ، ثُمَّ بَيَّنَ ذَلِكَ، فَمَنْ هَمَّ بِحَسَنَةٍ فَلَمْ يَعْمَلْهَا كَتَبَهَا اللَّهُ عِنْدَهُ حَسَنَةً كَامِلَةً، وَإِنْ

هَمَّ بِهَا فَعَمِلَهَا كَتَبَهَا اللَّهُ عِنْدَهُ عَشْرَ حَسَنَاتٍ إِلَى سَبْعِمِائَةِ ضِعْفٍ إِلَى أَضْعَافٍ كَثِيرَةٍ، وَإِنْ هَمَّ بِسَيِّئَةٍ فَلَمْ يَعْمَلْهَا كَتَبَهَا اللَّهُ عِنْدَهُ حَسَنَةً كَامِلَةً، وَإِنْ هَمَّ بِهَا فَعَمِلَهَا كَتَبَهَا اللَّهُ سَيِّئَةً وَاحِدَةً".

رَوَاهُ الْبُخَارِيُّ ، وَمُسْلِمٌ في "صحيحيهما" بهذه الحروف.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தம் இறைவனைப் பற்றி அறிவிக்கையில் (பின்வருமாறு) கூறினார்கள்: அல்லாஹ் நன்மைகளையும் தீமைகளையும் (அவை இன்னின்னவை என நிர்ணயித்து) எழுதி விட்டான். பிறகு அவற்றை தெளிவுப்படுத்தி விட்டான். ஒருவர் ஒரு நன்மை செய்ய வேண்டும் என (மனதில்) எண்ணிவிட்டாலே (அதைச் செயல்படுத்தா விட்டாலும்) அவருக்காகத் தன்னிடம் அதை ஒரு முழுமையான நன்மையாக அல்லாஹ் பதிவு செய்கிறான். அதை அவர் எண்ணியதுடன் செயல்படுத்தியும் விட்டால். அந்த ஒரு நன்மையைத் தன்னிடம் பத்து நன்மைகளாக, எழுநூறு மடங்காக, இன்னும் அதிகமாக அல்லாஹ் பதிவு செய்கிறான். ஆனால், ஒருவர்

ஒரு தீமை செய்ய எண்ணி, அதைச் செய்யாமல் கைவிட்டால், அதற்காக அவருக்குத் தன்னிடம் ஒரு முழு நன்மையை அல்லாஹ் எழுதுகிறான். எண்ணியபடி அந்தத் தீமையை அவர் செய்து முடித்துவிட்டாலோ, அதற்காக ஒரேயொரு குற்றத்தையே அல்லாஹ் எழுதுகிறான். என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அறிவிப்பவர் இப்னு அப்பாஸ்(ரலி) அவர்கள் நூல்: புகாரி முஸ்லிம்

## الحديث الثامن والثلاثون

عَنْ أَبِي هُرَيْرَة ﷺ قَالَ: قَالَ رَسُول اللَّهِ ﷺ إنَّ اللَّهَ تَعَالَى قَالَ: "مَنْ عَادَى لِي وَلِيًّا فَقْد آذَنْتهُ بِالْحَرْبِ، وَمَا تَقَرَّبَ إلَيَّ عَبْدِي بِشَيْءٍ أَحَبَّ إلَيَّ مِمَّا افْتَرَضْتُهُ عَلَيْهِ، وَلَا يَزَالُ عَبْدِي يَتَقَرَّبُ إلَيَّ بِالنَّوَافِلِ حَتَّى أُحِبَّهُ، فَإِذَا أَحْبَبْتُهُ كُنْت سَمْعَهُ الَّذِي يَسْمَعُ بِهِ، وَبَصَرَهُ الَّذِي يُبْصِرُ بِهِ، وَيَدَهُ الَّتِي يَبْطِشُ بِهَا، وَرِجْلَهُ الَّتِي يَمْشِي بِهَا، وَلَئِنْ سَأَلَنِي لَأُعْطِيَنَّهُ، وَلَئِنْ اسْتَعَاذَنِي لَأُعِيذَنَّهُ". رَوَاهُ الْبُخَارِيُّ.

எவன் என் நேசரை பகைத்துக் கொண்டானோ அவனுடன் நான் போர் பிரகடனம் செய்கிறேன். எனக்கு விருப்பமான செயல்களில் நான் கடமையாக்கிய ஒன்றை

விட வேறு எதன் மூலமும் என் அடியான் என்னுடன் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்வதில்லை. என் அடியான் கூடுதலான (நஃபிலான) வணக்கங் களால் என் பக்கம் நெருங்கி வந்து கொண்டே யிருப்பான். இறுதியில் அவனை நேசித்து விடும் போது அவன் கேட்கிற செவியாக, அவன் பார்க்கிற கண்ணாக, அவன் பற்றுகிற கையாக, அவன் நடக்கிற காலாக நான் ஆகிவிடுவேன். அவன் என்னிடம் கேட்டால் நான் நிச்சயம் தருவேன். என்னிடம் அவன் பாதுகாப்புக் கோரினால் நிச்சயம் நான் அவனுக்குப் பாதுகாப்பு அளிப்பேன். ஓர் இறை நம்பிக்கையாளனின் உயிரைக் கைப்பற்றுவதில் நான் தயக்கம் காட்டுவதைப் போன்று, நான் செய்யும் எச்செயலிலும் தயக்கம் காட்டுவ தில்லை. அவனோ மரணத்தை வெறுக்கிறான். நானும் (மரணத்தின் மூலம்) அவனுக்குக் கஷ்டம் தருவதை வெறுக்கிறேன். என அல்லாஹ் கூறுவதாக நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்: அறிவிப்பவர் அபூஹுரைரா (ரலி) அவர்கள் நூல்: புகாரி

## الحديث التاسع والثلاثون

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا أَنَّ رَسُولَ اللَّهِ ﷺ قَالَ: "إنَّ اللَّهَ تَجَاوَزَ لِي عَنْ أُمَّتِي الْخَطَأَ وَالنِّسْيَانَ وَمَا اسْتُكْرِهُوا عَلَيْهِ" .

حَدِيثٌ حَسَنٌ، رَوَاهُ ابْنُ مَاجَهْ ، وَالْبَيْهَقِيّ

எனது சமூகத்தினரின் மறதி, தவறு மற்றும் நிர்பந்தம் காரணத்தால் செய்பவைகளை எனக்காக அல்லாஹ் மன்னித்து விட்டான் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ்(ரலி) நூல்: இப்னுமாஜா பைஹகீ.

## الحديث الأربعون

عَنْ ابْن عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا قَالَ: أَخَذَ رَسُولُ اللَّهِ ﷺ بِمَنْكِبِي، وَقَالَ: "كُنْ فِي الدُّنْيَا كَأَنَّك غَرِيبٌ أَوْ عَابِرُ سَبِيلٍ". وَكَانَ ابْنُ عُمَرَ رَضِيَ اللَّهُ عَنْهُمَا يَقُولُ: إذَا أَمْسَيْتَ فَلَا تَنْتَظِرْ الصَّبَاحَ، وَإِذَا أَصْبَحْتَ فَلَا تَنْتَظِرْ الْمَسَاءَ، وَخُذْ مِنْ صِحَّتِك لِمَرَضِك، وَمِنْ حَيَاتِك لِمَوْتِك. رَوَاهُ الْبُخَارِيُّ.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என் தோளைப் பிடித்துக் கொண்டு 'உலகத்தில் நீ அந்நியனைப் போன்று, அல்லது வழிப் போக்கனைப் போன்று இரு' என்று கூறினார்கள். (அறிவிப்பாளர்களில் ஒருவரான முஜாஹித்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: 'நீ மாலை நேரத்தை அடைந்தால் காலை வேளையை எதிர்பார்க்காதே! நீ காலை வேளையை அடைந்தால் மாலை நேரத்தை எதிர்பார்க்காதே! நீ நோய் வாய்ப்படும் நாளுக்காக உன்னுடைய ஆரோக்கியத்தில் சிறி(து நேரத்)தைச் செலவிடு. உன்னுடைய இறப்புக்குப் பிந்திய நாளுக்காக உன்னுடைய வாழ்நாளில் சிறிது நேரத்)தைச் செலவிடு'என்று இப்னு உமர்(ரலி) அவர்கள் கூறுவார்கள் நூல்: புகாரி

## الحديث الحادي والأربعون

عَنْ أَبِي مُحَمَّدٍ عَبْدِ اللَّهِ بْنِ عَمْرِو بْنِ الْعَاصِ رَضِيَ اللَّهُ عَنْهُمَا،

قَالَ: قَالَ رَسُولُ اللَّهِ ﷺ "لَا يُؤْمِنُ أَحَدُكُمْ حَتَّى يَكُونَ هَوَاهُ تَبَعًا لِمَا

جِئْتُ بِهِ". حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ، رَوَيْنَاهُ فِي كِتَابِ "الْحُجَّةِ" بِإِسْنَادٍ صَحِيحٍ.

உங்களில்ஒருவர் நான் கொண்டு வந்ததை மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளாதவரை விசுவாசம் கொண்டவராக மாட்டார் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: அம்ருப்னு ல் ஆஸ்(ரலி) நூல் :உஜ்ஜா

## الحديث الثاني والأربعون

عَنْ أَنَسِ بْنِ مَالِكٍ ﷺ قَالَ: سَمِعْت رَسُولَ اللَّهِ ﷺ يَقُولُ: قَالَ اللَّهُ تَعَالَى: "يَا ابْنَ آدَمَ! إنَّكَ مَا دَعَوْتنِي وَرَجَوْتنِي غَفَرْتُ لَك عَلَى مَا كَانَ مِنْك وَلَا أُبَالِي، يَا ابْنَ آدَمَ! لَوْ بَلَغَتْ ذُنُوبُك عَنَانَ السَّمَاءِ ثُمَّ اسْتَغْفَرْتنِي غَفَرْتُ لَك، يَا ابْنَ آدَمَ! إنَّك لَوْ أَتَيْتنِي بِقُرَابِ الْأَرْضِ خَطَايَا ثُمَّ لَقِيتنِي لَا تُشْرِكُ بِي شَيْئًا لَأَتَيْتُك بِقُرَابِهَا مَغْفِرَةً".

رَوَاهُ التِّرْمِذِيُّ وَقَالَ: حَدِيثٌ حَسَنٌ صَحِيحٌ.

ஆதமுடைய மகனே நீ என்னிடம் பிரார்த்தனை செய்து என் மீது ஆதரவு வைத்திருக்கும் வரை உன்னிடத்தில் உள்ளதை நான் மன்னித்து விட்டேன். பெரிதாக எடுத்துக் கொள்ளமாட்டேன். ஆதமுடைய மகனே உனது பாவங்கள் வானத்திலுள்ள மேகங்களை அடைந்தாலும் நீ என்னிடம் பாவமன்னிப்பு தேடினால் உன்னை மன்னித்து விடுவேன். பெரிதாக எடுத்துக் கொள்ள மாட்டேன். ஆதமுடைய மகனே எனக்கு எதையும் இணையாக்காத நிலையில் பூமி நிறைய பாவங்களுடன் என்னிடம் நீ வந்தால் அந்தளவுக்கு பாவ மன்னிப்பை உனக்கு நான் வழங்குவேன் என்று அல்லாஹ் கூறுவதாக நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்:அனஸ் இப்னு மாலிக் (ரலி) நூல்: திர்மிதி

## الحديث الثالث والأربعون

عَنْ ابْنِ عَبَّاسٍ رَضِيَ اللَّهُ عَنْهُمَا، قَالَ: قَالَ رَسُولُ اللهِ ﷺ قَالَ:

"أَلْحِقُوا الْفَرَائِضَ بِأَهْلِهَا، فَمَا أَبْقَتَ الْفَرَائِضُ فَلِأَوْلَى رَجُلٍ ذَكَرٍ" .

رواه البخاري، ومسلم ]

(நிர்ணயிக்கப் பெற்றுள்ளவாறு) பாகப் பிரிவினை பாகங்களை அவற்றுக்கு உரியவர் களிடம் (முதலில்) சேர்த்து விடுங்கள். பிறகு எஞ்சியிருப்பது (இறந்தவரின்) மிக நெருக்கமான (உறவினரான) ஆணுக்கு உரியதாகும் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ்(ரலி) நூல்: புகாரி முஸ்லிம்

## الحديث الرابع والأربعون

عَنْ عَائِشَةَ رَضِيَ اللَّهُ عَنْهَا عَنْ النَّبِيِّ ﷺ قَالَ: " الرَّضَاعَةُ تُحَرِّمُ مَا تُحَرِّمُ الْوِلَادَةُ". رواه البخاري ، ومسلم

இரத்த உறவின் காரணத்தால் ஹராமாகிற அனைத்துமே பால்குடி உறவின் காரணத்தாலும் ஹராமாகி விடும் என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் அறிவிப்பவர்: ஆயிஷா(ரலி) நூல்: புகாரி முஸ்லிம்